7th September 1960]

*Correspondence (Tamil)*

* 500 *Q.*—SRI M. KALYANASUNDARAM (on behalf of SRI V. K. KOTHANDARAMAN): கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தமிழில் கடிதப் போக்குவரத்து வைத்துக்கொள்ள வேண்டுமென்று ஆட்சி மொழி சட்டத்தின்கீழ் அறிவிக்கப்பட்ட காரியாலயங்களில் தமிழில் பிரசுரிப்பதோடு, ஆங்கிலத்தில் பிரசுரிக்க வேண்டுமென்றும், ஆங்கிலம்தான் அதிகார பூர்வமானது என்றும் அரசாங்கம் அறிவித்துள்ளதா?

(ஆ) அதற்கான காரணம் என்ன?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) & (*b*) Yes, Sir.

(ஆ) The procedure is in consonance with clause 3 of Article 348 of the Constitution of India.

*Lottery*

* 501 *Q.*—SRI P. G. MANICKAM: கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

1960-ம் ஆண்டில் பல்வேறு விதமான சூதாட்டங்கள் நடத்தியதற்காக (i) எத்தனை பேர்கள் தண்டிக்கப்பட்டார்கள்?

(ii) எத்தனை பேர்களுக்கு அபராதம் விதிக்கப்பட்டது?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (i) 12,859.

(ii) 10,782.

Besides these, 53 persons were sentenced to both fine and imprisonment.

*Hindi*

* 502 *Q.*—SRI A. A. RASHEED: Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Government are aware of the move of the Dravida Munnetra Kazhagam Party to agitate against the introduction of Hindi in the Madras State; and

(*b*) if so, the steps to be taken to counteract the move?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) Yes, Sir.

(*b*) The Government are watching the situation closely, and will take appropriate action as and when necessary. The agitation purports to be against the directions issued by the President recently under Article 344 (6) of the Constitution, but the Government cannot see that there is anything in those directions to agitate about as far as this State is concerned.

SRI A. A. RASHEED: Sir, is the Hon. Minister aware that recently pelting of stones against shops took place in Kumbakonam during the agitation and if so, what steps have been taken by the Government to prevent such hooliganism hereafter?

[7th September 1960

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The Government have no information about it. But I have seen some reports in the press. We are watching the situation. Police authorities will take adequate action to avert hoolinganism.

SRI M. KALYANASUNDARAM ஸார், திராவிட முன்னேற்றக் கழகத்தார் இயக்கத்தை ஒடுக்க நடவடிக்கை எடுக்க வேண்டுமா? அல்லது . . . (குறுக்கீடு)

MR. SPEAKER : The Hon. Minister said that he was watching the situation.

SRI M. KALYANASUNDARAM : இதிலே இருக்கக் கூடிய பிரச்சினை ஹிந்தி சம்பந்தமானது. அது பற்றி மத்திய சர்க்காருக்குத் தெரிவிக்க வேண்டிய கடமை அரசாங்கத்திற்கு இருக்கிறது. பிரதம மந்திரி கொடுத்த வாக்குறுதி சம்பந்தமான எடுக்க வேண்டிய நடவடிக்கையை பொறுத்த வரை என்ன காரியங்கள் செய்யப்பட்டன? கிளர்ச்சியைத் தவிர்க்க மட்டுமா நடவடிக்கை எடுக்க இருக்கிறார்கள்?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மொழிப் பிரச்சினை பற்றியும், ஹிந்தி அரசாங்க நிர்வாக மொழியாவது பற்றியும் நம் மாகாணத்தில் மக்களுடைய உணர்ச்சி சம்பந்தமாகவெல்லாம் என்னுடைய சகா, கனம் கல்வி அமைச்சரவர்கள் இந்த மன்றத்திலே விளக்கியிருக்கிறார்கள். கிளர்ச்சி சம்பந்தமாக அது பல விதம் இருக்கிறது. இரண்டு நாட்களுக்கு முன்னால் கூட நான் வீட்டில் இருக்கும்போது, இந்த சபைக்கு வருவதற்கு முன்னால், ஒரே சத்தமாக, "ஒழிக, ஒழிக" என்று கத்திக் கொண்டு இருந்தார்கள். யார் ஒழிக என்று தெரியவில்லை. கிளர்ச்சியில் பல விதம் உண்டு; ஒழுங்கான கிளர்ச்சி, ஒழுங்கற்ற கிளர்ச்சி: ஒழிக, ஒழிக என்று கத்திக் கொண்டே இருப்பவர்கள், அவர்களுக்கும் பின்னால் கல்லை எடுத்துப் போடவேண்டும் என்று தோன்றும். அது மாதிரிப் பண்ணுகிறவர்களை அடக்க வேண்டும், அதைத்தான் கவனித்துக்கொண்டு இருக்கிறோம் என்று சொன்னேன்.

SRI A. GOVINDASAMY : கல்லை எடுத்து யார் போடுகிறார்கள்: ஆளும் கட்சியைச் சேர்ந்த ஒரு உறுப்பினர், அவர்கள் கிளர்ச்சி செய்கிறார்கள், கல்லைத் தூக்கிப் போடு என்று செய்யலாம் அல்லவா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினர் அவர்களுக்கு நேர்மை ஒன்றும் புரியவில்லை. யார் கல்லை எடுத்துப் போட்டாலும் அது அடக்கப் படவேண்டும். கனம் அங்கத்தினர் அவர்கள் ஆத்திரப்படுவதைப் பார்த்தால், அதில் அவர்களுக்குச் சம்பந்தம் இருப்பது போல் தோன்றுகிறது.

SRI A. GOVINDASAMY : ஸார், நான் ஒரு ஒழுங்குப் பிரச்சினையைக் கிளப்புகிறேன். நானே அப்படிச் செய்திருப்பேன் என்று . . . .

7th September 1960]

**Mr. SPEAKER :** கனம் அங்கத்தினருக்கு சம்பந்தம் இருக்குமோ என்று தோன்றுகிறது, என்று சொன்னார்கள். It is not unparliamentary.

**Sri A. GOVINDASAMY :** நான் சம்பந்தப்பட்டிருப்பதாக . .

**Mr. SPEAKER :** கனம் அங்கத்தினர் அவர்களுக்கு அந்த யோசனை இல்லாவிட்டால், ஏன் கவலைப்பட வேண்டும்? கவலைப் படவேண்டாம்.

*Hospital (Govindanagar)*

* 503 Q.—**Sri N. R. THIAGARAJAN :** கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டப்படி மதுரை ஜில்லா, பெரியகுளம் தாலுகா, கோவிந்த நகரத்தில் ஆஸ்பத்திரி திறக்காததன் காரணம் என்ன?

**The Hon. Sri M. A. MANICKAVELU :** The information is being collected and will be placed on the table of the House as soon as possible.

*Christian Prayers*

* 504 Q.—**Sri A. VEDARATHNAM :** கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

கிருஸ்தவ மிஷனரிகள் நடத்தும் உதவிபெறும் பள்ளிகளில் குறிப்பாக ஹாஸ்டலில் உள்ள ஹிந்து மாணவர்களை சர்ச்சுக்குப் போய் தொழும்படியும், பிரார்த்தனையில் கிருஸ்தவ பாடல்களையே பாடும்படியும் கட்டாயப்படுத்தி வருவது அரசாங்கத்திற்குத் தெரியுமா?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** The Government are not aware of any such practice.

**Sri A. VEDARATHNAM :** ஸார், 'ஸெகுலர் ஸ்டேட்டில்', இம் மாதிரி மதப் பிரார்த்தனை செய்வதும், மற்ற மதப் பிரார்த்தனைகளுக்கு இடமில்லாமல் செய்வதும் சரியா? அந்த இடங்களில் ஒரு மத சம்பந்தப்பட்ட பிரார்த்தனைக்குப் பதிலாக, காந்திஜி அவர்கள் செய்தது போல் சர்வமத பிரார்த்தனை நடத்த சர்க்கார் முன் வருவார்களா?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** பள்ளிக்கூடங்களைப் பொறுத்தவரை, பள்ளிக்கூட நடவடிக்கையில் ஒரு ஐட்டமாக பிரார்த்தனையை வைத்துக்கொள்ளக் கூடாது. தனியாக, இஷ்டம் உள்ளவர்கள், பிரார்த்தனைகள் நடத்திக் கொள்ளலாம். அவரவர்கள், மற்றவர்கள் உரிமையைத் தெரிந்து கொண்டு சுமுகமாக நடத்தலாம். ஒருவருக்கொருவர் கசப்பும், வெறுப்பும், ஏற்படும்வண்ணம் நடப்பதும் கிளர்ச்சி செய்வதும் கூடாது.